# வைதிக தர்ம வர்த்தனி



ஆசிரியர் :

மலர் 13 | ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா. | சார்வரி ஹூ
இதழ் 9 | | ஆனி மீ

## யஜுர்வேத ஸந்த்யா வந்தனம்.

( ஐந்தாம் பதிப்பு. )

ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம், பதவுரை, கருத்து, ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்கள், சில புதிய விஷயங்கள் அடங்கியது.

விலை ரூ. 1—50. V. P. P. யில் அனுப்பினால் ரூ. 2—25.

கிடைக்குமிடம் :— ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா, 'மாம்பலம் குருகுலம்' 2, ஸ்டேஷன் ரோடு, W.மாம்பலம், சென்னை 17.

### சந்தாதாரர்களுக்கும், ஏஜண்டுகளுக்கும்

## ஓர் விக்ஞாபனம்

* இது வரையில் 13ம் ஆண்டுக்காக சந்தாதுகை அனுப்பாதவர்கள் தயவுசெய்து சந்தா துகையை அனுப்பி வைக்க வேண்டுகிறோம்.
* சந்தா அனுப்பும்போது சந்தா நம்பரையும் விலாசத்தையும் தெளிவாக எழுதுங்கள்.
* விலாசம் மாறினால் ஆங்கிலமீ 8ம் தேதிக்குள் விலாச மாறுதலை தெரிவித்துவிடுங்கள்.
* ஏஜெண்டுகள் ஒவ்வொரு மாதமும் வரவழைக்கும் காப்பிகளுக்கு அடுத்தமாத காப்பிகள் வெளிவருவதற்குள் கமிஷன் போக பாக்கி துகையை அனுப்பிவைக்க வேண்டுகிறோம்.
* வைதிக தர்ம வர்த்தனீ புஸ்தகத்தைத் தவிர இதர தனி பிரசுரங்களுக்கு புத்தக அறிமுகத்தில் கொடுத்துள்ள விலாசத்திற்கு எழுதிப் பெற வேண்டுகிறோம்.

சார்வரிஸூ ஆனிமீ க்ரீஷ்மருது. உத்தராயணம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஶ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ். | ஷஷ்ட். | 44-27 | அவி. | 19-50 | சி. ம. | — |
| 2 | 15 | புதன் | ஸப். | 41-32 | சத. | 18-00 | சி. அ. | — |
| 3 | 16 | வியா. | அஷ். | 40-27 | பூரட். | 18-02 | சி. | அஷ் |
| 4 | 17 | வெள் | நவ. | 41-07 | உத்ர. | 19-52 | சி. | நவ. |
| 5 | 18 | சனி | தச. | 43-18 | ரேவ. | 23-13 | சி. | தச. |
| 6 | 19 | ஞா. | ஏகா. | 46-45 | அசு. | 27-55 | சி. | ஏகா. |
| 7 | ஜூன் 20 | திங் | த்வா. | 51-10 | பர. | 33-38 | சி. ம. | த்வா. |
| 8 | 21 | செவ். | த்ர. | 56-20 | க்ருத். | 40-07 | சி. அ. | த்ர. |
| 9 | 22 | புதன் | சசி. | 60-00 | ரோ. | 47-05 | சி. | சசி. |
| 10 | 23 | வியா ● | ,, | 1-55 | மிருக. | 54-23 | ம. | அமா |
| 11 | 24 | வெள். | அமா. | 7-50 | திரு. | 60-00 | சி | ப்ர. |
| 12 | 25 | சனி | ப்ர. | 13-52 | ,, | 1-50 | சி. | த்வி. |
| 13 | 26 | ஞா. | த்வி. | 19-50 | புன. | 9-17 | சி. | — |
| 14 | 27 | திங். | த்ரி. | 25-30 | பூச. | 16-28 | சி. | த்ரி. |
| 15 | 1960ஞு 28 | செவ். | சது. | 30-35 | ஆயி. | 23-07 | சி. | சது. |
| 16 | 29 | புதன் | பஞ். | 34-43 | மகம் | 28-55 | சி. அ. | பஞ். |
| 17 | 30 | வியா. | ஷஷ்ட். | 37-32 | பூரம் | 33-27 | சி. ம. | ஷஷ்ட் |
| 18 | 1 | வெள். | ஸப். | 38-43 | உத். | 36-25 | சி. அ. | சப். |
| 19 | 2 | சனி | அஷ் | 38-03 | ஹஸ். | 37-35 | ம. | அஷ் |
| 20 | 3 | ஞா. | நவ. | 35-22 | சித். | 36-47 | சி. | நவ. |
| 21 | 4 | திங். | தசமி | 30-45 | சுவா. | 34-00 | அ ம. | தச. |
| 22 | 5 | செவ் | ஏகா. | 24-23 | விசா. | 29-33 | ம. சி. | ஏ. த். |
| 23 | ஜூலை 6 | புதன் | த்வா. | 16-30 | அனு. | 23-35 | சி. | த்ர. |
| 24 | 7 | வியா. | த்ர<br>சசி. | 7-35<br>57-57 | கேட். | 16-35 | சி. | சசி. |
| 25 | 8 | வெள் ○ | பௌ. | 48-05 | மூல. | 9-02 | அ. | பௌ |
| 26 | 9 | சனி | ப்ர. | 38-28 | பூரா.<br>உத்ரா | 1-13<br>53-53 | சி. | ப்ர. |
| 27 | 10 | ஞா. | த்வி. | 29-35 | சிர. | 47-22 | அ. ம. | த்வி. |
| 28 | 11 | திங். | த்ரி. | 21-47 | அவி. | 42-07 | சி. | த். ச. |
| 29 | 12 | செவ். | சது. | 15-30 | சத. | 38-30 | ம. | பஞ். |
| 30 | 13 | புதன் | பஞ். | 10-58 | பூரட். | 36-43 | அ. சி. | ஷஷ்ட் |
| 31 | 14 | வியா. | ஷஷ்ட் | 8-25 | உத்ர. | 36-55 | சி. | சப். |
| 32 | 15 | வெள். | ஸப். | 7-48 | ரேவ. | 39-00 | சி. அ. | — |

6, 22உ ஏகாதசி, 8, 23உ ப்ரதோஷம், 8உ க்ருத்திகை, 10உ அமாவாசை.

**பிராம்மணருக்கு பிராம்மணரே உதவ முடியாகாலம்.**

यतः धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ



धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரிஸு ஆனிமீ | இதழ் 9



## பொருள் அடக்கம்.




வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம் :
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

# ஆத்மைவ ஹி ஆத்மனோ பந்து:

## தனக்குத் தானே துணை.

பிறப்பு ஸம்பந்தத்தால் சிலருக்கு சில உதவி புரிய நாம் கட்டுப்பட்டிருக்கிறோம். பந்தமெனில் கட்டு எனப் பொருள். இவ்வுலக வாழ்க்கையிலும் மறு உலகிற்கும் உதவி புரியக் கட்டுப்பட்டவரே பந்து எனப்படுவர். தற்கால ரீதியில் இத்தகைய பந்துவைக் காண்பதே அரிது. உண்மையிலேயே ஒரு சிலர் உதவிசெய்ய சக்தி இல்லாதவர்களாகவே இருக்கலாம். சிலர் சக்தி இருந்தும் மந மில்லாமல் இருக்கலாம். எப்படியாயினும் இவ்வுலகில் லௌகிக உதவி புரியும் பந்துகூட துர்லபமாகிவிட்டனர்!

ஒருவனுக்கு மனைவி, புத்ரன், பெண், மருமகன், மருமகள், ஸஹோதரன், ஸஹோதரி இவர்கள் நெருங்கிய பந்து எனப்படுவர். தன்னைத் தான் காத்துக்கொள்ள முடியாத நிலையிலுள்ள பந்துக்களைக் காப்பது, கல்வியூட்டி, செல்வம் சேர்த்து வைப்பது, நம் கடமை யாகும். இதை எதிர்பார்க்க அவர்களுக்கு உரிமையுண்டு. அதேபோல் வயதானபின் நம் முடலைக் காப்பது பந்துக்களின் கடமை யாகும். அதை எதிர்பார்க்க நமக்கு உரிமையுண்டு.

நாம் நமது புத்ராதிகளுக்குச் செய்யும் கடமையைப் பகவான் அன்பெனும் மாயா பாசத்தாற் பிணைத்திருக்கிறார். அச் சமயம் நாம் நம் சுகத்தைக் கருதாமல் சில ஸமயம் பட்டினி இருந்துகூட அவர்களைக் காக்கிறோம். அவர்களது உதவியை எதிர்பார்த்து நாம் அதைச் செய்வதில்லை. பின் வயதைவிட இறந்தபின் நம் உணவை நாம் தேடிக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம். இவர்களை ரக்ஷிக்கும் காலத்தில் பரலோகத்தில் நமக்கு வேண்டியதைத் தேடிக்கொள்ள அவகாசம் இருப்பதில்லை. எண்ணமும் உண்டாவதில்லை.

கிழ வயதில் பந்துக்களால் கைவிடப்பட்டு, சிலர் தவிப்பதைக் காணலாம். இதேபோல்தான் புத்ராதிகள் சிராத்தம் ஒழுங்காகச் செய்யாதிருந்தால் உணவின்றி பரலோகத்தில் நாம் வருந்துவோம்.

தன் கடமையை விட உரிமையையே எதிர்பார்க்கின்றனர். ஒவ்வொருவரும் வற்புறுத்துகின்றனர். உரிமையை விட்டு கடமையில் கவனம் செலுத்துவோர் சான்றோர். நமக்கு சக்தியுள்ளபோது மற்றவருக்குச் செய்யும் கடமையுடன் நமக்கும் சில கடமைகளைச் செய்துகொள்ளவேண்டும்.

நாம் தனியாகவே பிறந்தோம். தனியாகவே செல்வோம். நம்முடன் தொடர்ந்து வரும் துணைவன் தர்மமே. சில பந்துக்கள் வீட்டுடன் நிற்பர். சிலர் ஸ்மசானம் வரை வருவர். அதன்பின்னும் பந்துவாக நம்முடன் வருவது நாம் செய்த தர்மமே யாகும். ஸகல ஸௌகர்யங்களுமிருந்தபோது நமக்கு முக்யமாக பரலோகத்திற்கு வேண்டியதைச் செய்துகொள்ளாவிடில் நமக்கு நாமே சத்ரு ஆவோம். புத்ரன் மனைவி முதலியவரிடம் அளவு கடந்த அன்புவைத்து நம்மை மறக்கிறோம்.

---

***பிராம்மணர் என்றோ இதரர் என்றோ கூறமுடியாதகாலம்***

நம்மிடத்தில் நாம் வைக்கவேண்டிய அன்பையும் மறக்கிரும். அதுதான் மாயை. நம் உடலில் மாத்ரம் அன்பு கொண்டால் போதா! ஆத்மாவிடம் அன்புகொள்ளவேண்டும். நரகத்தில் இடர்படாதிருக்க வேண்டும்! பர லோகத்தில் பசி தாஹம் என்னை வாட்டாதிருக்க வேண்டும்! என ஒவ்வொரு நாளும் ஒரு நிமிஷமாவது நினைக்க வேண்டும். அதற்கென ஒரு சிறிய தர்மத்தை யாவது செய்யவேண்டும். நாம் கூறியது இம்மை மறுமைகளுக்கே! ஆனால்,

பகவான் கிருஷ்ணன் அர்ஜுநனுக்குக் கூறும் வகையில் எல்லோருக்கும் உபதேசிக்கிருர். ஜநநமரண ப்ரவாஹத்தில் வீழ்ந்த நமக்கு நாமே பந்து. எழுப்ப முயற்சிக்காவிடில் நமக்கு நாமே சத்ரு. உன்னைக்கொண்டே உன்னை முன்னுக்குக் கொண்டுவா. உன்னை நாசம் செய்து கொள்ளாதே என்கிருர்!

## ஸ்ரீ காமகோடி பீடாதிபரின் அமிருத மொழி

### காணுததை கேநத்தில் தேடு.

பத்து உபநிஷத்துகளில் கேந உபநிஷத் ஒன்று. இதைப் பற்றிய பழமொழி அது. கண்ணுக்குக் காணுதது. ஆனல் எங்கும் உளது ஒரு வஸ்து. அதே பிரும்மம். அதனல்தான் ஸகல கார்யங்களும் நடக்கின்றன. கேநத்தில் ஒரு கதை. தேவர் ஒரு ஸமயம் அஸுரரை ஜயித்தனர். வெற்றி கொண்டாடினர். அதில் நாங்களே ஜயித்தோம். எங்கள் மஹிமை இது எனக் கர்வங்கொண்டனர். ஸர்வேச்வரன் இவர்களுக்குப் பாடம் கற்பிக்கக் கருதினுர். ஒரு ஜோதிர்மயமான தூண்போல் நின்ருர். அதற்கு அடி நுனி தெரியவில்லை. அது என்ன என்று அறிந்து வா! என வாயுவை அநுப்பினர். அதை அந்த வஸ்து (யக்ஷம்) நீ யார் எனக் கேட்டது. அவர் நான் பலவானுன வாயு என்ருர். ஆனல் இந்த த்ருணத்தை அசை என அவரால் அதை அசைக்க முடியவில்லை. அக்நியை அனுப்பினர். அதனல் அதைக் கொளுத்த முடியவில்லை. ஒருவராலும் முடியாமல்போக இந்த்ரன் வந்தான். யக்ஷம் மறைந்தது! அவர் வருந்தி கர்வம் நீங்கி நின்ருர். உபநிஷத் வித்யையான தேவி அவருக்கு தர்சநம் தந்து பிரும்ம ஸ்வரூபமது. அவனன்றி அணுவும் அசையாதென கூறினுள். உலகை ஆட்டிவைப்பது பகவானே.

## ஜோதிஷப் பகுதி வராது.

நமக்குப் பல்லாண்டுகளாகத் தொண்டு செய்துவந்த ஜோதிஷ பானு ஸ்ரீ இ. எஸ். கே. ஸ்வாமி, 19-5-60 காலை திடீரென அநாயாஸ மரணமடைந்ததால் ஷெவிஷயம் வெளிவராது. ஜோதிஷ ரஸிகர் பெரும் நஷ்டமடைவர்.

---

வருங்கால சிறுவர் நிலைதான் மோசமாகிறது.
பொது இடத்தில் பிராம்மணர்பற்றியே பேசாதே!

  



# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

**ப்ரணீதா.** (வைகாசியீ தொடர்ச்சி.)

கிழக்கில் விடுவதால் தேவர்களும், தெற்கில் விடுவதால் பித்ருக்களும், மேற்கில் விடுவதால் பத்நீ, பசுக்களும், வடக்கில் விடுவதால் ஓஷதிகளும், மரங்களும், மேலாக விடுவதால் யக்ஞும், (கர்மா) பூமியில் விடுவதால் ஸம்வத்ஸர தேவதை (யஜமானன்) முதலியனவும் சுத்தியடைகின்றனர் என்று தாத்பர்யம். இதுதான் இந்த கர்மாவில் யக்ஞத்தில் உள்ளது போன்ற அவபிருதமாம்.

பிறகு பிருஹ்மாவுக்கு வரமளிக்கவேண்டும். வரன் என்ருல் கோ (பசுமாடு) என்று அர்த்தம். (சில விடங்களில் கறவை மாட்டுக்கும் மற்றும் சிலவிடங்களில் குதிரைக்கும் பொருந்தும் வர என்பது.) ஆனாலும் அவற்றுக்குப் பதிலாக இப்போது தக்ஷிணையைத் தான் தருகிறோம்.

**உபஸ்தாநம்:** தேவதைகளை நாடி துதித்தலாம். ஒரு ஸமித்தை அக்நியில் வைத்துவிட்டு பரிஸ்தரண தர்ப்பங்களை (முன்போட்ட தர்ப்பங்களை) பிரதக்ஷிணமாக போட்டப் பிரகாரம் கிழக்கு முதல் வடக்கு முடிய எடுத்து வடபுறத்தில் கிழக்கு அக்ரமாக வைத்து விட்டுப் பிறகு **அக்நெய** முதலிய மந்திரங்களாலும் சில ஶ்லோகங்களாலும் அக்னியைப் பிரார்திப்பது. அதன் கருத்து: ஓ அக்நி தேவனே! எங்கள் அபராதத்தையெல்லாம் போக்கி நல்ல பலன்களைக் கொடுக்கத் தயாராக இருக்கும் நீர் ஸத்கார்யங்களைச் செய்வதற்காக ஶாஸ்திர விருத்தமில்லாத நல்ல மார்கத்தில் எங்களுக்கு நிறைய தனம் கிடைக்கும்படியாகச் செய்யும். இன்னது பாபகார்யம் என்று நன்ருயறிந்த நீர் எங்களிடமிருந்து மிகக் கொடுமையைத் தரக் கூடிய பாபங்களையும் அகற்றுவீராக. இந்த பேருபகாரம் செய்த உமக்கு பிரதிபலனுக நாங்களும் தங்களுக்கு மிகதிருப்தியைத் தரக்கூடியதான "நமஸ்காரம் செய்கிறோம்" என்னும்வார்த்தையைப் பலமுறை சொல்லுகிறோம். [காண் 1. ப்ர 1. அனு 14] இந்த மந்திரத்தை நியமத்துடனிருந்து ப்ரதிதினமும் அக்நியின் ஸந்நிதியில் ஜபித்தால் நிறைய ஐஶ்வர்யம் கிடைக்கும்.

---

ப்ராம்மணர் இதரர் பற்றி வாயே திறக்கக் கூடாது.

பாபங்களும் தொலேயும். உபஸ்தாநத்தைத் தவிர அவாந்தரமான காம்யபலனேயும் தருகிறது இந்த மந்த்ரம்.

(**मन्त्रहीनं** என்பதின் கருத்து) அக்நிதேவனே ! மந்திரக்குறைவாகவோ அங்கக்கிரியைகள் குறைவாகவோ பக்தி குறைவாகவோ என்னல் செய்யப்பட்ட ஹோமத்தை பரிபூர்ணமாய் செய்ததாக ஆக்கிக்கொள்வீர்.

(**प्रायश्चित्त।** என்பதின் கருத்து) அக்நி கார்யம் செய்யும்போது நேரக்கூடிய சில தவறுகளுக்காக தபஸ் (ப்ராணுயாமம்) ப்ராயஶ்சித்தம் முதலியன சொல்லியிருக்கின்றன. அவைகளேச் செய்யும் போதும் சில தவறுகள் நேரக்கூடும். ஆகையால் எல்லாவித தோஷங்களேயும் போக்கக்கூடிய ஸ்ரீ க்ருஷ்ண என்னும் பகவந்நாமாவை அவஶ்யம் ஶ்ரத்தா பக்தியுடன் ஸ்மரிக்கவேண்டும் (சொல்லவும் வேண்டும்.)

(பிறகு நமஸ்காரம் செய்ய வேண்டியது.)

சிலர் அபிவாதயே சொல்கின்றனர். அவரவர் முன்ஞேர் ஸம்ப்ரதாயப்படி செய்யவும். தேவர் ஸூர்யன் அக்னி பசு ஸந்யாஸி ஸபை ஸமுத்ரம் ஸ்த்ரீ சந்திரன் இவர்களே நமஸ்காரம் பண்ணிய பிறகு அபிவாதனம் வேண்டியதில்லே என்பது பலருடைய ஸம்ப்ரதாயம். மஹர்ஷிகள் வாக்கும் ஆகும். சிலர் ஔபாஸநாக்னிக்கு மட்டும் அபிவாதநம் செய்கின்றனர்.

**ரக்ஷை:** மோதிரவிரலால் கிழக்கு அல்லது ஈஶாந்யத்திலிருந்து பஸ்மாவை எடுத்து ரக்ஷைதரித்துக் கொள்ள வேண்டும். தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் கூடாது.

இந்த கர்மா நன்ருக அனுஷ்டிக்கப்பட்டதாக ஆகும் பொருட்டு "அஞக்ஞாதாதி" மந்திரங்களும் புருஷ ஸூக்தம் முதலிய வற்றையும் பெரியோர்கள் செய்ததை யொட்டி நாமும் அவஶ்யம் செய்யவேண்டும்.

இதன்பின் பவித்ரத்தின் முடிச்சை அவிழ்த்து ஆசமனம் செய்து கர்மாவைப் பகவானுக்கு அர்ப்பணம் செய்து ஸர்வதேவதா ஸ்வரூபிகளான ப்ராஹ்மணர்களேயும் திருப்தி செய்து வைக்கவேண்டும். இதனல் பகவான் ப்ரீதியடைந்து நம்மை எப்போதும் காப்பாற்றுவார்.

---

**எவரேனும் ஏதேனும் சண்டையிட்டாலுங்கூட**

அக்நியை எப்போதும் தார்யமாக உமியுடன் முட்டான் வைத்து உகையில் அமைத்து காத்து வரவேண்டும். (உகை – ஔபாஸநகுண்டம்) அப்படி முடியாத சில சமயங்களில் ஸமித்ஸமாரோபணம் அல்லது ஆத்மஸமாரோபணம் செய்து ஜாக்ரதையாக ரக்ஷித்து வரவேண்டியது. (ஸமாரோபணம்-அக்நியை ஸமித்தில் அல்லது நம்மிடத்தில் வந்திருக்கும்படி செய்வது.) ஸமாரோபணம் செய்திருக்கும் காலத்தில் பிரதி வேளையிலும் கௌணகாலத்திலாவது ஹோமம்செய்தே ஆகவேண்டும். (காலையில் உதயமுதல் 12 நாழிகைவரை ப்ராதர் ஹோமத்திற்கு முக்யகாலம். அதன்பின் ஸூர்யாஸ்தமனம் வரையிலும் கௌணகாலம். இரவு அஸ்தமனம் முதல் 9 நாழிவரை ஸாயம் ஹோமத்திற்கு முக்ய காலம். அதன்பின் ஸூர்யோதயம் வரையிலும் கௌணகாலம் எனப்படும்)

கௌணகாலத்திலும் ஹோமம் செய்யாவிடில் அக்நிக்குநஷ்டம் ஏற்படும். நஷ்டமெனில் தீ இருந்தாலும் அங்குள்ள தேவதாம்சம் அகன்று விடும். இதே போல் அக்னி தார்யமாயிருக்கும் போதும் சில அஸௌகர்யத்தால் ஔபாஸந ஹோமம் செய்ய முடியாமல் சேர்ந்தார்ப்போல் 8 வேளை ஹோமம் விட்டுப் போனாலும் கூட அக்னி நஷ்டமாகும். இந்த சந்தர்பத்தில் 7 வேளைவிட்டு 8 வது வேளையில் கௌணகாலத்திலாவது (விட்டுப் போனவைக்கு ப்ராயஶ்சித்தம் பண்ணிவிட்டு உடனே) அக்காலத்திய ஹோமத்தைச் செய்து விட்டால் அக்னி நஷ்டம் ஏற்படாது. இந்த சமயம் அக்னி அணைந்து போகாமல் தார்யமாயிருக்க வேண்டியதவஶ்யம். 8 வது கால ஹோமம் கௌணகாலத்திலும் செய்யாமற்போனல் தார்யாக்னியும் நஷ்டமாகும். ஸ்த்ரீகள் அக்ஷதைப் போடுவதும் அவஶ்யமான போதுதான் செய்யலாம். இரண்டொரு வேளை புருஷன் வெளியில் சென்றல் ஸ்த்ரிகள் அக்ஷதை ஹோமம் செய்யலாம். புருஷன் அஶ்ரத்தையால் செய்யாதிருந்து ஸ்த்ரீ அக்ஷதைப் போடுவதும் உசிதமில்லை. அக்ஷதைப் போடுவதும் ஏழு வேளை தான் செய்யலாம்.

ஆத்ம ஸமாரோபணம் செய்திருக்கும்போது அசுத்தமானவருடன் பேசினலும், பொய் சொன்னலும்,

---

**அநாவச்யமாக பிராம்மணஜாதி நிந்திக்கப்படுகிறது.**

ஜலத்தில் மூழ்கினாலும், ஸ்த்ரீசேர்க்கை நேர்ந்தாலும் அக்னி நஷ்டமாகும். ஸமாரோபணமான ஸமித்தையோ ப்ரத்யக்ஷமான அக்னியையோ ஆத்மஸமாரோபணமான தன்னையோ பிராம்மணேதர்கள் காக்கை பதிதன் ரஜஸ்வலா ஸ்த்ரீ நாய் முதலியன தொட்டு விட்டாலும் ஸமாரோபணமான ஸமித்துக்கட்டாலும் அக்னி நஷ்டமாகும். ஆத்ம ஸமாரோபணம் செய்து கொண்டவருக்கு ஶவத்துக்குப் பின்னால் போகும்படி நேர்ந்தாலும் வ்ருத்தி ஆஶௌசம் முதலியன வந்தாலும் அக்நியை உபாவரோஹணம் செய்து அதன் பின் இதரரைக் கொண்டு உபகாத ப்ராயஶ்சித்தம் ஸர்வ ப்ராயஶ்சித்தம் பண்ணிய பிறகு ஔபாஸன ஹோமம் செய்விக்கவேணும். ஒரு போதும் விடக்கூடாது. விட்டுப் போனால் அக்னிஸந்தானம்தான் செய்யவேண்டும். அதை பற்றியும் பிறகு எழுதுகிறோம்.

அக்னியில் ஹோமம் செய்ய வேண்டியதைப் பற்றி வேதம் கூறுகிறது. இங்கு சொன்னதெல்லாம் அக்நிஹோத்ரத்தில் கூறப்பட்டுள்ளவைகளேயாம். ஔபாஸநத்திலும் சில அம்ஶங்கள் வருகின்றன. [கார்ஹபத்யம் வட்டமான பூர்ண சந்த்ரன் போன்ற குண்டம். அதே மூலஸ்தானம். ஆஹவநீயம் தேவ ஹோமத்திற்கான சதுரஶ்ரமான குண்டம். தக்ஷிணாக்நி மடித்த போளி போலுள்ள குண்டம். பித்ருஹோமத்திற் கேற்றது. இம் மூன்றும் த்ரேதாக்நி எனப்படும். இதில் காலை மாலை ஹோமம் செய்வது அக்நி ஹோத்ரமாம்.]

(1) கார்ஹபத்யம் என்னும் தார்யாக்னியிலிருந்து ஹோமம் பண்ணுவதற்காக காலை மாலைகளில் ஆஹவநீயத்துக்குக்கொண்டுபோய் அவ்விடம் வைக்கவேண்டும். அந்த ஸமயத்தில் ஹோமம் செய்தால் அக்னி தேவன் வஸுக்கள் ரூபமடைந்து திருப்தி யடைகிறான். (2) ஆஹவனீயத்தில் வைத்த பிறகு புகைந்து கொண்டிருக்கும் போது ஹோமம் செய்தால் ருத்ரரூபியாக இருந்து திருப்தி அடைகிறான். (3) அக்னியைப் பலப்படுத்த வைத்திருக்கும் ஸமித்துகளில் முதல் முதலில் கிளம்பும் ஜ்வாலையில் ஹோமம் செய்தால் ஆதித்ய ரூபியாக திருப்தி யடைகிறான். (தொடரும்)

---

## சாந்தோக்ய உபநிஷத்.



ஹ்ருதயாகாஶத்திற்கு ஐந்து த்வாரங்கள் இருக்கின்றன. அதன் கிழக்கு த்வாரத்தை பிராணன் கண் ஆதித்யன் தேஜஸ் என்று உபாஸிப்பவன் தேஜஸ்ஸையும் ஜீர்ண ஶக்தியையும் பெறுவான்.

தெற்கு த்வாரத்தை வாயு காது சந்த்ரன் வியானன் இவைகளுடன் சேர்த்து ஸம்பத், யஶஸ் என உபாஸித்தால் செல்வத்தையும் கீர்த்தியையும் பெறுவான்.

மேற்கு த்வாரத்தை அபானம் வாக்கு அக்னி இவைகளைப், பிரும்ம தேஜஸ் ஜீர்ண ஶக்தி என உபாஸித்தால் பிரும்மவர்ச்சஸ்ஸையும் ஜீர்ணஶக்தியையும் பெறுவான்.

வடக்கு வழியை ஸமானன் மேகம் இவைகளை கீர்த்தியும் காந்தியும் என உபாஸித்தால் கீர்த்தியும் காந்தியும் உண்டாகும்.

மேலே உள்ள த்வாரத்தை உதான வாயுவாகவும் ஆகாசம் ஓஜஸ் மஹஸ் எனவும் உபாஸித்தால் பலமும் பெருமையும் உண்டாகும். மேலே சொன்ன ஐந்து பிரும்ம புருஷர்களும் ஸ்வர்க்கத்தின் துவாரபாலகர்கள் என அறிபவன் ஸ்வர்க்கத்தை அடைவான். அவனது குலத்தில் யோகி பிறப்பான்.

ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் சிறந்ததாக ஒரு ஜோதிஸ் பிரகாசிக்கின்றது. அது இந்த உலகையும் ஜநந மரணங்களையும் கடந்த ஸத்யலோகம் முதலான லோகங்களில் பிரகாசிக்கின்றது.

அத்தகைய ஜோதிஸ் நமக்குள்ளேயும் பிரகாசிக்கிறது. நன்கு கவனித்தால் அதைப் பார்க்கலாம், கேட்கலாம். நமது உடலைத் தொட்டால் அது சிறிது சூடுள்ளதாகத் தெரிகிறதல்லவா? அதே அந்த ஜோதிஸ் இருப்பதற்கு அடையாளம். இரு செவிகளையும் நன்ருக விரல்களால் மூடிக்கொண்டால் ஓடும் தேரில் உண்டாவது போலும் காளை கர்ஜிப்பது போலும் அக்னி எரிவது போலும் ஒரு சப்தம் உண்டாகிறதைக் கேட்கலாம். இவைகளை நன்ருக அறிகிறவன் அழகும் கீர்த்தியும் உள்ளவனுவான்.

---

இந்த உலகெலாம் பிரும்மம். பிருமத்தினிடமிருந்தே உண்டாகிறது. பிரும்மத்தினிடமே இருக்கிறது. பிரும்மத்தினிடமே முடிவில் லயமாகிறது என்று எண்ணி சாந்தனாக இருந்து உபாஸிக்க வேண்டும். இவ் வுலகில் எப்படி உருதிகொண்டு உபாஸிக்கிறானோ அப்படியே மறு பிறவியிலும் மறு உலகிலும் அம்மாதிரி பயன் பெறுவான். (இதே ஹிப்நாடிஸம் மெஸ்மெரிஸம் என்பதாம்.)

ஆத்மா மநோமயன். பிராணனையே உடலாக உடையவன். பிரகாசமுள்ளவன். ஸத்ய ஸங்கல்பன். ஆகாச வடிவன், ஸகல கர்மரூபி. காம ரூபி. ஸர்வ கந்தமாகவும் ஸர்வ ரஸ ரூபனாகவும் இருப்பவன். உலகை எல்லாம் வியாபித் திருப்பவன். வாக்கும் ஒருவித பரபரப்பும் இல்லாதவன்.

இத்தகைய ஆத்மா எனது ஹ்ருதயத்தில் நெல்லு அரிசி யவம் கடுகு இவைகளைவிடச் சிறியதாகவும் பூமி ஆகாசம் ஸ்வர்க்கம் இவைகளைவிட மிகப் பெரியதாகவும் இருக்கிறது. இப்படிப்பட்ட பரமாத்மா நாம் முக்தி பெறுவதற்காக நமது ஹிருதயத்தில் இருக்கிறார் என்று உபாஸிப்பவனுக்கு பிரும்ம ஸ்வரூபம் ஸித்திக்கும் என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. இப்படி சாண்டில்யர் கூறுவதால் இதற்கு **சாண்டில்ய வித்யை** என்று பெயர்.

**கோசவித்யை:** ஹ்ருதய கமலத்திலுள்ள த்வாரங்களையும் த்வார பாலகர்களையும் உபாஸிப்பவர் வீரனான புத்ரனைப் பெறுவான் என்றது உபநிஷத். அந்த புத்ரன் தீர்க்காயுள் உள்ளவனாக இருக்க வேண்டுமென்று கோச வித்யை கூறப்படுகிறது. க்ஞானமும் மோக்ஷமுமே உபாஸநங்களுக்கு முக்ய பலன். வீரனான புத்ரன் பிறப்பதும் அவன் தீர்க்காயுஸ் உள்ளவனாக இருப்பதும் அவாந்தர பலம். (கோசம்—பணம் வைக்குமிடம்.)

மூன்று லோக வடிவமானது கோசம். இதற்கு ஆகாசம் மத்ய பாகம். பூமி அடி பாகம். திக்குகள் மூலைகள். ஸ்வர்க்கம் மேல்வழி. நாசமில்லாத கர்ம பலன் இவைகள் கோசத்தில் வைக்கப்பட்ட தநங்களாம்.

---

**நாம் கூடியவரை பிறர்மேல் படாமலிருக்கலாம்.**

# அஷ்டாவக்ர கீதை.

ஒன்ருய் அழிவில்லாததாய் சாந்தமாய் சிதாகாசமாய் நிர்மலமாய் இருக்கின்ற உனக்கு பிறப்பேது? செயல் ஏது? அஹங்காரந்தான் ஏது?

நீ ஏதாவதொன்றைப் பார்க்கும்பொழுது உன்னையே தான் வேறென்ருகப் பார்க்கிருய். உன்னைத்தவிர அது வேறு வஸ்துவில்லை. ஸ்வர்ணத்தாலாகிய காப்பு வளை அங்கதம் முதலியன எல்லாம் ஸுவர்ணந்தானே.

இது நான், இது அவன், அது நானல்ல என்ற பேதங்களை விடு. எல்லாம் ஒன்ருன ஆத்மாதான் என்று எண்ணு. யாதொரு ஸங்கல்பமும் செய்யாதே. சுகமாக இருப்பாய். உன்னுடைய அக்ஞானத்திஞல்தான் உலகத் தோற்றம். உண்மையாக நீ ஒருவன்தானிருக்கின்ருய்! உன்னைத்தவிர ஜநந மரண முள்ளவனே ஜநந மரண மில்லாதவனே வேறு ஒருவனுமில்லை.

இந்த உலகம் வெறும் பிராந்திதான். உலகமாகத் தோன்றுவது என்றும் ஸ்திரமாக இருக்கக்கூடிய உண்மை பொருளில்லை. ஆத்ம ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்தபின் ஒன்றும் நிற்காது. ஆத்மாவினிடமே சமனமாகும்.

ஸம்ஸாரக் கடலில் ஜீவனுகவே ஒருவன்தா னிருந்தான். இருக்கிருன். உண்டாகப் போகிருன். எல்லாம் ஒன்ருனதால் உனக்குப் பந்தமுமில்லை, மோக்ஷமுமில்லை.

ஸங்கல்ப விகல்பங்களைக் கொண்டு மநதில் கலக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளாதே. நீ சின்மயன் என்பதை நினைத்து ஶாந்தனுக இரு. ஆநந்த வடிவமான உனது நிஜ ரூபத்திலே நிலைத்திரு.

வேறொன்றையும் தியாநம் செய்யாதே! எதையும் மநதில் எண்ணுதே. நீ தான் ஆத்மா. நீ முக்தி பெற்றவன் என்று நன்கு திருடமாக உணர்ந்தால் நீ செய்யவேண்டியதென்ன இருக்கிறது?

***16-ம் அத்யாயம்:*** பலவகை சாஸ்த்ரங்களைக் கேட்டதாலும் பிறருக்குப் போதிப்பதாலும் மாத்ரம் ஆத்ம நிலை

---

**அதுவும் கூட்டத்தில் முடியாதென்பது நிதர்சநம்.**

ஏற்படுவதில்லை. அந்த சாஸ்த்ர வாஸனையையும் மறந்து ஆத்ம நிலையில் நிற்கவேண்டும். போகங்களை அநுபவித்தாலும் கர்மாவைச் செய்தாலும் ஸமாதியிலீடுபட்டாலும் ஸர்வ ஆசைகளையும் விட்டாலன்றி மநதிற்கு சாந்தி ஏற்படாது.

ஆயாஸத்துடன் செய்யும் ஸகல கார்யங்களும் துக்கத்தைத்தான் தரும். இதை ஒருவரும் அறிவதில்லை. ஆசைகளை விடு என்ற உபதேசத்தைக் கடைப்பிடித்தால் சுகம் ஏற்படும்.

கண்ணை மூடுவது திறப்பது என்ற கர்மாவில் ஈடுபட்டவனுக்குக் கூட கஷ்டம் இருக்கிறது. அதைக் கூட விட்டவனுக்குத் தான் ஸுகம். மற்றவனுக்கில்லை.

இதைச் செய்துவிட்டேன். இதைச் செய்யவில்லை என்ற த்வந்த்வங்கள் கூட மநதில் தோன்றக் கூடாது. தர்மார்த்த காம மோக்ஷங்களில்கூட இது வேண்டும், இது வேண்டாம் என்ற எண்ணங் கூடாது.

நான் விரக்தன். விஷயங்களில் வெறுப்புள்ளவன். நான் ராகீ. விஷய ஆசை யுள்ளவன். ஸம்ஸாரீ. விடுபட்டவன் முதலிய எண்ணங்கள் அறவே அற்ருல்தான் மநஸ் ஶாந்தி தோன்றும்.

இது வேண்டும். இது வேண்டாம் என்ற எண்ணமே ஸம்ஸார மரத்திற்கு மூலையாகும். ஆசை உள்ளவரையில் ஶாந்திக்கு இடமில்லை.

ஒரு கார்யத்தைச்செய்ய ஆரம்பித்தால் ஆசை வளருகிறது. எந்த கார்யத்தை வேண்டாமென மறுக்கிறோமோ அதில் த்வேஷம் உண்டாகிறது. ஆதலால் குழந்தைபோலிரு. ஆசை வெறுப்பு முதலிய த்வந்த்வங்களை விட்டிரு.

ராக முள்ளவன் துக்கத்தை உண்டுபண்ணுகிறதே என்ற காரணத்தால் ஒரு ஸமயம் ஸம்ஸாரத்தை விட்டுவிட விரும்புவான். அதனுல் பிறகு கஷ்டப்படுவான். உண்மையான வைராக்ய முள்ளவனே ஸம்ஸார மிருந்தாலும் துக்கத்தை அநுபவிப்பதில்லை. அதை அகற்ற முற்படுவதுமில்லை.

---

ஒருவரை என்மேலே படாதே என்று கூறினுல்

பாலர் பகுதி.

# பால பாரதம்.

## துரோண பர்வா.

கே : ஆஹா ! காண்டீவத்தை எவரேனும் நிந்தித்தால் அவரைக் கொல்வதாக பார்த்தன் பிரதிக்ஞை என கேட்டிருக்கிறேன் என்ன நடந்தது ?

ப : பிரதிக்ஞையின்படி தர்மரைக்கொல்ல கத்தியை எடுத்தான். பகவான் அதைத்தடுத்து "பெரியோரை நீ என்று ஒருமையில் கூறினலும் நிந்தித்தாலும் அவரைக் கொன்றது போலாகும்" என்ருர்.

கே: ஆஹா ! நல்ல யுக்தி ! அர்ஜுனன் தர்மரை நீ, போரில் என்ன ஸாதித்தாய் ? அடிபட்டு தோல்வியுற்ருய் எனக்கூறி அவரை கொல்லாமல் விட்டிருப்பான்.

ப : ஆம் ! ஆனல் தன் தமயனை நிந்திப்பவரைக் கொல்வதாக பிரதிக்ஞை செய்திருந்தபடி தன்னையே கொல்ல முயற்சித்தான்.

கே : அடடா? என்ன கஷ்டம்? இதிலிருந்தும் பகவான் அவனை எப்படி காப்பாற்றினர் ?

ப : ஆத்ம ஸ்துதி செய்துகொண்டால் ஆத்மஹத்திக்கு ஒப்பாகும் எனக்கூறி அதை அடக்கினர்.

கே : மிக விசித்ரமான விஷயம் இது. ஸர்வக்ஞனை பகவானுக்குத் தான் தெரியும். ஸமமான வீரர் கர்ணர்ஜுனர்கள். யுத்தமும் மிக உக்ரமாக நடந்திருக்குமே ?

ப : ஆமாம்! பகவானும் பீமனும் அடிக்கடி பார்த்தனை உத்ஸாஹமூட்டினர். கர்ணன் நாகாஸ்த்ரம் ஒன்றை வைத்திருந்தான் பார்த்தனைக் கொல்ல. அதை விடும்போது தலைக்கு நேராக குறி பார்த்தான். பகவான் காலால் தேரை அழுத்தி அந்த பாணம் கிரீடத்தை அடிக்கும்படி செய்தார். அதனல் தலைக்கு வந்தது தலைப்பாவுடன் போயிற்றென ஒரு பழமொழியும் தோன்றிற்று.

---

**அது கொலைக்குற்றத்தைவிட அதிகமாகக் கருதப்படும்**

கே: இங்கும் பகவானது அருளே அவனைக் காத்தது? மேலே.

ப: கர்ணனது தேர் பிராம்மண சாபத்தால் பூமியில் அமிழ்ந்தது. பசுங்கன்றுமீது தேரையோட்டி அதைக் கொன்றதால் முக்யமான காலத்தில் உன் தேர் பூமியில் அழுந்தும் என சபித்தார் பிராம்மணன்.

கே: கர்ணன் என்ன செய்தான்?

ப: கீழே இறங்கி சக்ரத்தைத் தூக்கிவைக்கும் வரை யுத்தம் செய்யாதே எனக்கூறி பூமியில் இறங்கினான். பகவான் இதுதான் ஸமயம் அவனைக்கொல் என்றார்! கொன்றான்.

கே: அப்பா! பெரிய பளுவு குறைந்தது. இனி ஜயம் விரைவில் தானில்லையா?

ப: கிருஷ்ணனே வியந்து, பார்த்தா! கர்ணவதம் உன்னால், என்னால், குந்தியால், பூமியால், இந்த்ரனாலும் நடந்தது என்றார்! அந்த உத்ஸாஹத்தால் பீமன் லக்ஷக்கணக்கான ஸேனைகளைக் கொன்றான்.

கே: பிறகு யாருக்கு ஸேநாபதி பதவி அளித்தான்?

ப: பாக்கி சல்யன் தானே பெருந்தலை. அவரை ஸேநாபதியாக்கினான்.

கே: இதுவரை வந்த கௌரவ ஸேநாபதிகள் அனைவரும் யம லோகம் சென்றனர். பாண்டவ ஸேநாபதி திருஷ்டத்யும்நன் சிரஞ்ஜீவியாக இருக்கிறான். மேலே.

ப: அது தான் கடைசி நாள். பதினெட்டாம் நாள் யுத்தம். தர்மர் சல்யனையும் அவன் தம்பியையும் கொன்றார். பீமன் பாக்கியுள்ள துர்யோதநன் தம்பிகளைக் கொன்றார். துர்யோதநன் இதைக் கண்டு குதிரை மீதேறி வெகுதூரம் சென்று பதுங்கிக்கொண்டான்.

கே: கஷ்டம்! மண்ணாசையால் பலரை மாளவைத்தான். பெரியோர் சொல்லைக் கேட்டிருந்தால் இந்த கதி வந்திருக்காது. பிறகு என்ன நடந்தது?

---

புருஷர் இதர ஸ்த்ரீகளை அடி, வாடி எனக்கூடாது.

ப : துர்யோதநன் ஒரு ஆழமான மடுவில் முழுகி மறைந்திருந்தான். தேடித்தேடியும் அவன் அகப் படவில்லை. பீமனுக்கு மாம்ஸம் கொண்டு தரும் வேடர்கள் கூற, பீமன் அங்கு சென்று "இதோ வீரலக்ஷணம்? இறந்தால் ஸ்வர்க்கம்! ஜயித்தால் பூமி! பேடியாயிராதே? குல கௌரவத்தைரக்ஷி!" என கோஷித்தான்.

கே : இதைப் பொருக்க மாட்டானே அவன்? வெளியில் வந்தானு?

ப : ஆமாம்! தர்மராஜனது தர்ம சிந்தையைப் பார்! மஹா பலிஷ்டனான துர்யோதநனே, எங்களில் நீ எவர் ஒருவரை ஜயித்தாலும் நாங்கள் தோத்தவ ராவோம். யாரோடு யுத்தம் புரிகிறாய்? என்று கேட்டார்.

கே : அடடா? இவர் சும்மா இருக்கக்கூடாதா? நீ வா? என தர்மரை அழைத்து கதையால் அடித்திருந் தால் என்ன கதி?

ப : துர்யோதநன் மஹாபலசாலி ஆனதால் இனி பிழைத்திருந்தாலும் நல்லதல்ல. என எண்ணிய தாலும் பீமனையே அழைத்தான். மற்றவர் முன் னிலையில் இருவர்க்கும் கதா யுத்தம் நடந்தது. பலராமரும் தீர்த்த யாத்ரையிலிருந்து வந்தார்.

கே : பகவானது அருளால் பீமன் பிரதிக்ஞை பூர்த்தி யாகி இருக்கும்?

ப : துர்யோதநனது தொடையை முறித்து இடது காலால் அவன் தலையை உதைத்தான் பீமன். தர்மர் துர்யோதநனை ஸமாதானப் படுத்தினர். தன் சிஷ்யனுக்கு நேர்ந்த அவமானத்தைக் கண்டு பலராமரும் பீமனைக் கடிந்தார்.

கே : பாண்டவர் வெற்றியுடன் ஊர் திரும்பினர்களா?

ப : ஜயித்தவன் ஏற்கவேண்டியதான சத்ருவின் கூடா ரத்திற்கு வந்தார்கள். அங்கு ஒரு ஆச்சர்யமான

---

இது மிக கேவலமான தப்பென கருதப்படுகிறது.

விஷயம். வழக்கத்திற்கு விரோதமாக அர்ஜுன! நீ இறங்கு முதலில் தேரை விட்டு என்ருர் பகவான்.

கே: ஸாரதி யன்ரோ முதலில் இறங்கி பராக் கூறி யஜமானனைப் பின்னற் இறக்கவேண்டும்?

ப: அப்படி அன்று செய்திருந்தால் அர்ஜுநன் தேரோடு எரிந்திருப்பான். அதனுல் அவனை இறக்கி விட்டு பகவானும் வேகமாகக் குதித்தார்?

கே: ஏனப்படி? அதென்ன விஷயம்?

ப: அந்த தேர் காண்டவநத்தில் அக்கி பகவான் தந்தது. அன்றியும் பீஷ்மாதிகள் பிரயோகித்த பிரும்மாஸ்த்ரம் முதலியன பகவான் தேரிலிருப்பதால் அதைக் கொளுத்தாதிருந்தன. கார்யம் முடிந்தவுடன் அதன் வீர்யத்துக்கு இடமளித்தார்.

கே: இது எல்லாவற்றையும்விட மிக மிக ஆஸ்சர்யகரமானது. மேலே என்ன நடந்தது?

ப: பகவான் பாண்டவர்களை அன்றிரவு கூடாரத்தில் தங்காமல் ரோதவதி என்ற நதி தீரத்தில் வஸிக்கும்படி செய்தார். தர்மர் வேண்டிக் கொண்டபடி 100 பிள்ளைகளையும் இழந்த மஹா பதிவிரதையான காந்தாரியை ஸமாதானப்படுத்த ஹஸ்திநாபுரம் சென்ருர்.

கே: அவளது நிலை மிக மோசமானது. பாவம்! எப்படி ஸமாதானமடைவது?

ப: கிருஷ்ணன் அவரவர் கர்மாவின்படியே தான் நடக்கும் என்று கூறினுர். தான் அந்தியகாலத்தில் புத்ரரில்லாமல் இறப்பதுபோல் நீயும் புத்ரர்களைப் பறி கொடுத்துப் பின்னர் இறப்பாய் என பகவானுக்குச் சாபம் அளிக்க அதைப் பெற்றுத் திரும்பினுர்.

---

# உபமன்யு பக்த விலாஸம்.

## 24 பெருமிழலை குறும்ப நாயனர் (மிதிலாத்விஜசூரர்.)

மிதிலா தேசத்திலே மிதிலாத்விஜர் என்ருெர் வேதியரிருந்தார். சிவபக்தி சிவயோகங்களால் அணிமா முதலிய அஷ்ட ஐஸ்வர்யங்களைப் பெற்ருர். சிவனடியார் தொண்டும் அடியாருக்கு அருசுவை அன்னம் அளிப்பதுமே அவருக்கு முக்ய தவமாயிருந்தது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளானை மீதேறி கைலை செல்வதை நிஷ்டையிலுள்ள த்விஜர் கண்டார். இனி இங்கென்ன வேலை? என யோகத்தினுல் உடலை உதறித்தள்ளி கைலாஸம் சென்ருர்.

## 25 காரைக்கால் அம்மையார் (பூதவதீ)

தென்னுட்டில் ஶார்ங்கரீவநம் (காரைக்கால்) என்ற ஊர் வாணிபர் நிறைந்த இடம். ஆங்கு தநதத்தர் என்ற வைச்யருக்கு புநிதவதீ என்ருெர் பெண் பிறந்தாள். குணத்திலும் குலத்திலும் அழகிலும் இவளுக்கேற்ற நாகைப்பட்டணத்திலுள்ள பரமதத்தர் என்பவருக்கு மணம் செய்வித்தார் தந்தை. புநிதவதி சிவபக்தியிலீடுபட்டவள். பதியே சிவனென பரிந்து பணிவிடை செய்வாள். பரமதத்தருக்கு ஒரு வியாபாரி ஒருநாள் மிகச்சிறந்த இரு மாங்கனிகளை அளித்தான். அதை அவர் தம் மனைவியிடமளித்து வியாபாரத்திலிடுபட்டார்.

பசியென்று வந்த சிவனடியாருக்கு அன்னமளிக்கும்போது அரிய அந்த மாங்கனியையும் பரிமாறினுள். கணவன் வந்து உண்ணும்போது மிகுந்த கனியை இலையிலிட்டாள். கனி நன்ருக இருக்கின்றது. மற்றதையும் அளி என்ருர் பதி. அந்த பழம் அதிதியின் குக்ஷிக்கன்ருே சென்றது? என் செய்வாள்? அடியாருக்கிட்டேன் எனலாம். ஆனல் அவர் உத்தர

வின்றி அப்படித் தந்தது. ஸதிக்கேற்ற தல்லவே! உள்ளே சென்று சிவனே! என் செய்வேன்? என்ருள்.

முற்கனியிலும் சிறந்த மணமும் ருசியுமுள்ள ஒரு கனி தந்தார் சிவன். அதைப் புஜித்த பரமதத்தன் ஆஹா! இது இதுவரை சுவைக்காத கனி! எங்கிருந்து பெற்றனளிதை? புனிதவதி! இனிது! இனிது! இன்னெரு கனிதருவாயா? என்ருர். என் செய்வாள்! கணவன் விருப்பைப்பூர்த்தி செய்வது தம் கடமை! ஆனல் எத்தனை முறை சிவனை யாசிப்பது? என தயங்கி வேறு வகையின்றி சிவனை வேண்டினள். சிவனும் அருளினர். ஆனல் அவனது கையிலிருந்து திடீரென மறைந்தது மாங்கனி.

ஆச்சரியங்கொண்ட பதி பத்நியின் மூலமாக உண்மை உணர்ந்தான். சிறந்த சிவனருள் பெற்ற புனிதவதியை மனைவியாக நினைப்பது தவறென உணர்தான். அதை அவளிடம் கூருமல் வாணிப நிமித்தம் வெளியூர் செல்வதாகக்கூறி வேறிடம் சென்று வேறு மனைவியை மணந்தான். அவர்களுக்கோர் பெண்ணும் பிறந்தது. முதல் மனைவியிடமிருந்த மதிப்பினல், அக் குழந்தைக்கு அவள் பெயரான புனிதவதி என்றே நாமம் சூட்டினன். இதை யறிந்த புனிதவதியார் கணவனிருப்பிடம் சென்ருள். பரமதத்தர் பரம ஸந்தோஷமடைந்தார். புனிதவதியாரின் திருவடியில் விழுந்து பணிந்து அவளது பக்தியைப் போற்றினர்.

அவளும் இனி இல்லறம் நமக்கில்லை! துறவறமே சிறந்ததெனக் கருதினள். ஒரு பெண் தனியே ஸஞ்சரித்தல் தகாது என யோசித்தாள். தனக்குப் பேயுருவம் தரும்படி சிவனை வேண்டினள். கைலையைக் காண பேரவாகொண்டாள். சிவன் ஸஞ்சரித்த இடத்தில் நமது காலை வைக்கலாமோ என அஞ்சி சிரஸால் நடந்தாள்! கருணை மூர்த்தி கைலாஸநாதன் அம்மையே வா என அழைத்து அவளருகே வந்து வேண்டிய வரங்களைத் தந்தார். திருவாலங்காட்டிலே தனது நடன ஆனந்தத்தைத் தர்சிக்கும்படி கூறினர். காரைக்காலம்மையார் அங்கு சென்று பல பாடல்களைப் பாடி மகிழ்ந்தாள்.

---

*ஸஹிக்க முடியாதபடி சிலர் தீங்கிழைத்தாலும்*

## 26. அப்பூதி அடிகள் (தத்பூதி).

சோளதேசத்தில் சசாங்க புரம் எனும் திங்களூர் என்ற ஊரில் பிரும்ம குலத்தில் ஒரு சிவபக்தனை வேதியனிருந்தார். அவர் திருநாவுக்கரசரிடம் பேரன்பு பூண்டு அவர் தொண்டனுக இருந்து அப்பூதி அடிகள் என காரணப் பெயர் பெற்றவர். குளம் வெட்டுதல் சாலை அமைத்தல் தண்ணீர் பந்தல் வைத்தல் முதலிய பூர்த்த தர்மத்தில் ஈடு பட்டாரவர். தானமைத்த ஒவ்வொன்றிற்கும் அப்பர் சாலை, அப்பர் குளம், அப்பர் தண்ணீர் பந்தல் என்றேபெயரிட்டார்.

ஒவ்வொரு க்ஷேத்ரமாக தர்சநம் செய்துவரும் அப்பர் திங்களூர் சென்றூர், ஆங்கு தன் பெயரிடப்பட்ட ஒரு தண்ணீர் பந்தலில் எல்லோருக்கும் நீர் மோர் அளிப்பதைக் கண்டார். இதற்கு தன் பெயரிடப் பட்ட காரணம் யாதென அறிந்தார். இங்ஙனம் தன் பால் பேரன்பு பூண்ட பெரியாரை தர்சிக்க அவரில்லம் சென்றூர். சிவ பக்தர் இருவரும் சேர்ந்து ஒருவரை ஒருவர் நமஸ்கரித்து தழுவி யோகக்ஷேமம் விசாரித்தனர். இறைவன் பெயரை விட்டு அமைத்தவன் பெயரை விட்டு எவன் பெயரையோ வைக்கக் காரணம் யாதென்றூர் அப்பர். நீர் அப்பர் பெருமையை அறியாதவர் போலிருக்கிறது. கற்றூணுடன் கடலில் தள்ளிய போதும் நற்றுணை நமச்சிவாயமே என்று சிவன் பெருமையை விளக்கியவர், வேறு யார்? என்றூர் அடிகள். சிறந்த பக்தனிடம் இன்னும் தன்னை மறைக்கலாகாதென உமது பேரன்புக்குப் பாத்ரமான அப்பன் நானே என்றூர். அடிகள் ஆநந்த வெள்ளத்தில் முழுகினூர். அறுசுவை அன்னத்துடன் ஆதித்யம் செய்தார்.

தோட்டத்திலிருந்து வாழ இலை, அறுத்துவரச் சென்ற அடிகளின் புத்ரனை அரவம் தீண்டி அங்கேயே விழுந்திறந்தான். இதை அறிந்தால் அப்பர் ஆதித்யம் ஏற்கமாட்டார் என்று அவ்வுடலை மூடி வைத்துவிட்டு அடிகள் மனைவி அன்னமளித்தாள். அப்பரிடம் வீபூதி பெற அனைவரும் வந்தனர். இறந்தவன் எப்படி வருவான்?

---

அவன் பெயர் பெரிய திருநாவுக்கரசு. அவனும் வரட்டுமென்ருர் அப்பர். அவன் இப்போது வரமாட்டான். என்று கூறி உணவு அளித்தனர். ஐயங் கொண்ட அப்பர் அவனும் வரட்டும் பிறகுண்போம் என்ருர். என் செய்வது?

அடிகள் உண்மையைக் கூறநேர்ந்தது. புத்ரன் மரணத்தைமதியாமல் தனக்கு விருந்தளிக்கும் அடிகளை மெச்சி ஒரு பதிகம்பாடினுர். உறங்கி எழுந்தவன் போல எழுந்தான் இறந்தவன். எல்லோருக்கும் மகிழ்ச்சியுடன் அன்னமளித்தாள் மனைவி. திருப்பழணப்பதிகத்திலே அப்பூதி அடிகளின் பெருமையை விளக்கினுர் அப்பர். அடிகளும் இறைவனடி சேர்ந்தார்.

## 27. திருநீலகன் நாயனுர் (நீலநக்நர்)

ஶாஸ்த்ர மங்கலமெனும் சாத்தமங்கலத்தில் வேதியர் வம்ஶத்திலுதித்த நீலநக்நர் சிவபூஜை அடியார் ஆராதநம், இவைகளையே முக்ய தவமாகக் கொண்டவர். ஒருநாள் திருவாதிரையில் மஹேசனை மனைவியுடன்கூடி அர்ச்சித்தார். அருகில் அமர்ந்து அரும் பஞ்சாக்ஷரி மந்த்ரத்தை ஜபித்தார். அச்சமயம் மேலிருந்து சிவலிங்கத்தின் மீது ஒரு சிலந்தைப் பூச்சி விழுந்தது. அவர் மனைவி உடனே எழுந்தோடி அதை தன் வாயால் ஊதினுள்.

சிலந்தி விஷம் மேல் பட்டால் உடலெல்லாம் தடிப்பு தடிப்பாகத் தோன்றும். உடனே ஊதினுல் பூச்சியும் ஓடும், தழும்பும் தோன்ருதென்பது சான்ருேர்முறை. ஊதும்போது அவள் வாய் எச்சிலுடன் கூடிய காற்று சிவசிரஸில் பட்டது அபசாரம் என்பது நக்நரின் எண்ணம். ஆதலால் தன் மனைவியைக் கடிந்தார். அந்த எச்சில் நீங்க திவ்யாபிஷேகம் செய்தார். சிவ அபசாரம் செய்த நீ என் முகத்தில் விழிக்காதே என்று அவளை விலக்கினுர்.

கருணைக் கடலான பகவான் இரவில் தனது ஸ்வரூபத்தை நக்நருக்குக் காண்பித்தார். அவர் மனைவி ஊதிய இடம் தவிர மற்றெல்லாவிடத்திலும் தழும்பு தோன்றியதைக் காட்டினுர். (தொடரும்)

---

யார் என்ன செய்தாலும் உதாஸீநமாக இரு.

   



# பிள்ளைப் பேறு.



பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

சகுந்தலை தொடர்ந்து பேசுகிறாள். "அரசே, இவன் தங்களுடைய புத்ரன் என்பதற்கு இவனே தக்க சாட்சி. வேறு சாட்சி எனக்கு எதற்கு? இவனை நன்றாகக் கூர்ந்து கவனியுங்கள்; ஸபையோர்களும் நன்கு கவனித்துத் தீர்ப்புக் கூறட்டும்.

गतिस्स्वरः स्मृतिस्सत्वं शीलं विज्ञान विक्रमौ ।
धृष्णुता प्रति भा चेयमावर्ता रोमराजयः ।
समा यस्य यदिस्युस्ते तस्य पुत्रो न सम्शयः ।

உருவம், சாயல், பார்வை, மொழி, நடை யாவும் தங்களுடைய பிம்பமாக அமைந்திருப்பதை யார் மறுக்க முடியும்? தான் பெற்ற பிள்ளையிடம் எந்தத் தகப்பனாவது பகை பாராட்ட விழைவானோ? பிள்ளைதான் அவ்வாறு இருப்பானோ? இது இயற்கையில் அமைந்த தெய்வீகப் பிணைப்பு. இதை முறிக்கப் பார்ப்பது மிகவும் கொடிய பாபமன்றோ?

புத்ரனை (பாலகனை) ஸ்பர்சிப்பதற்கு இணையான ஸுகம் உலகில் எதுவும் இல்லை என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அது உண்மைதான். உலகில் பெற்றோர்கள், பிள்ளைகளை மடியில் வைத்து, அணைத்து, உச்சி முகர்ந்து,

"குழந்தாய்! நீ என் சரீரத்தில் ஒவ்வொரு அவயவங்களினின்றும் தோன்றியிருக்கிறாய். முக்கியமாக என் ஹிருதயத்தில் ஏற்பட்ட, அன்பின் பெருக்கே உன்னை உண்டாக்கி யிருக்கிறது. நானே மறுபடியும் உன்னுடைய உருவத்தில் வந்திருக்கிறேன். என்னுடைய

---

*நம்மையோ ஜாதியையோ நிந்தித்தால் பேசாதே.*

பிராணன் உன் வசப்பட்டது. உன் மூலமாக என் ஸந்ததி குறைவில்லாமல் வளர வேண்டும். நூறு வருஷம் ஸுகமாக ஜீவித்திருப்பாய் " என்று கூறுகின்றனர். [இவை ஸத்தியத்தில் தோய்ந்த வேத வாக்கியங்கள். ஆதலாலிந்த வாய்மைமொழிகள், பிள்ளையின் சரீரத்தில் ஒவ்வொரு அணுவிலும் தங்கி அவனை வளர்க்க திடம் பெறுகின்றன.] இதை "ஜாத கர்மா" என்றும் இதை ஒவ்வொருவனும் தன் பிள்ளைக்கு செய்விக்க வேண்டியவன் என்றும் பெரியோர்கள் விதித்துள்ளனர். நீர் இதை அறியீரோ? மன்னவா! தரும சாஸ்திரங்கள் பொய் சொல்லி பிழைக்க வைக்காது. அவைகளை அவ்வப்பொழுது ஏற்பது கடினம் என்று நினைந்து அவைகளைப் புறக்கணிக்க முற்படுபவன், தன் அழிவைத் தானே தேடிக்கொள்ளுகிறான். நீரோ, வேந்தர் வேந்தன்.! உமக்குத் தெரியாத தரும சாஸ்திரமா? ஆராய்ந்து தெளியாத புத்தி உமக்கா! அல்லவே அல்ல. இது என் குற்றமே. நான் பிறந்தபொழுதும் அநாதையாகக் கிடந்தேன். பெற்றோர்களோ மிக மிகப் பெரியோர்கள்! விசுவாமித்ரரும் மேனகையும் என்னைப் பெற்றெடுத்து விட்டுப் போயினர். நான் மாலையிட்ட மணாளனோ, இந்த மாநிலம் போற்றும் சக்ரவர்த்தி. எனினும் நான் அநாதையாகவே நிற்கிறேன். என் பரிபவம் இந்த உம்முடைய பிள்ளைக்கு ஏற்படாமல் பாதுகாக்க வேண்டும். இவனை நான் மூன்று வருஷம் சுமந்து பெற்றேன். பிறக்கும்பொழுதே அசரீரி இவனை உலகிற்கு அறிவித்தது. அடவியிலுள்ள தபஸ்விகளும் பெரியோர்களும் இதைக் கேட்டு மகிழ்ந்தனர். இவனுக்காக உம்மை மறுபடியும் சரணம் அடைகிறேன். இக் குழந்தையைக் காப்பாற்றும்.

சகுந்தலையின் உருக்கும் வாக்கை மறுத்து அரசன் மீண்டும் கடும் சொற்கள் பல பேசி, அவளை ஏசினான்.

---

அவளோ சிறிதும் கலக்கமின்றித் தன் கண்கள் கனல் வீசத் தன் நேர்மையைத் தெரிவிக்கிருள்.

‘‘அரசே ! நான் முன்பு சொன்னது போலவே உம்முடைய தவறை நீரெண்ணியும் பார்க்கத் துணியவில்லை. பிறருடைய குற்றத்தைப் பார்க்கிறதே கார்யமாக வைத்துக்கொண்டீர். இந்த மூர்க்கர்களுடைய பழக்கம், உமக்கு ஏன் வந்தது? கொடியவனை நல்லவனுகவும் நல்லவனைக் கொடியவனுகவும் பேசும் கூட்டுறவும் இங்கு உமக்கில்லை.

பிறருடைய துக்கம் கேட்டு மனம் சகிக்காதவன் அரசன். தன்னுட்டில் ஒரு சிறு பிரஜைக்கும் துயரம் ஏற்படப் பொறுக்காதவன் அரசன். அப்படியிருக்க, இந்த தர்ம ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கும் தாங்கள் தங்கள் கண்ணெதிரே கதறி நிற்கும் ஒரு பதிவிரதையையும், பாலகனையும் கண்ணெடுத்தும் பாராமல் வீண் வசைமாரி பெய்கிறீர். இது முறையல்ல.

सुखं जीवन्ति दोषज्ञामूर्खा दोषानुदर्शिनः ।
ये तु वाच्याः परैस्सन्तः परानाहुस्तथा विधान् ॥

பெரியோர்களைப் பணிந்து போற்றும் குற்றமில்லாத ஒரு ஸாதுவை ஒரு துஷ்டன், வலுவில் இழுத்து இவன் மகா துஷ்டன் என்று பறைசாற்றித் திருப்தி அடைகிருன். தன் குற்றம் மலிந்தவன் குணமுள்ளவன் ஒருவனைப் பின்பற்ற முடியாமல் அவனை நிந்தித்து ஆனந்தமடைகிருன். அவனுக்கு இதைத் தவிர வேறு செயல் இல்லை.

अतो हास्यतरं लोके किंचिदन्यन्न विद्यते ॥

இது உலகின் கொடியவர்களின் விநோதமான போக்கு. அதற்குத் தாங்கள் உட்பட வேண்டாம். பிள்ளைகள் ஆறுவிதம் : உரிய மனைவியிடம் பிறந்தவன்,

அநாதையாய்க் கிடந்து ஆதரவு காட்டப்பட்டவன், ஸ்வீகாரம் செய்து கொண்டவன், அபிமான புத்ரன், விலைக்கு வாங்கப்பட்டவன், இவர்களோடு, விவாகம் ஆகாத கன்னிகையிடம் பிறந்து வளர்க்கப்பட்ட கானீனன் என்பவனும் சேர்த்துச் சொல்லப்படுகிறுன். இவர்கள் ஆறுபேரும் சொத்துக்கு உரியவர் என்பது மனுவின் வாக்யம். இந்தப் பிள்ளையோ விதிப்படி விவாகம்செய்துகொண்ட ஒரு குலமங்கையிடம் ஜனித்த உம்முடைய மற்ருெரு சரீரமே.

எத்தனையோ யாகங்களையும், தவத்தையும் செய்து ஒருஸத் புத்ரனை அடைகின்றனர். அந்த ஸத் புத்ரர்கள் நூறுபேர்களை தியாகம் செய்தாவது ஒரு ஸத்யத்தைக் காப்பாற்ற வேண்டியது என்பது பெரியோர் கண்ட உண்மை. ஸத்யத்தைப் பாதுகாப்பதைப் போல் ஒரு தர்மமோ ஒரு கர்மமோ வேறெங்கும் எதுவுமில்லை.

सर्वे वेदाधिगमनं सर्वतीर्थावगाहनं ।
सत्यस्येव च राजेन्द्र कलांनार्हन्ति षोडशीं ॥
नास्ति सत्यसमो धर्मो नसत्याद्विद्यते परं
आत्मानं सत्य धर्मांच पालयेथा महीपते ।

ஆதலால் உம்மையும் (உம்மை என்றதும் உம் முடைய வடிவமான இந்தப் பிள்ளையையும்) நீர் முன் பளித்த ஸத்யத்தையும், உம்முடைய (மனைவியாகிற) தர்மத்தையும் காப்பாற்றும். இது உமக்கு உயர்வுதரும். இதற்கும் செவி சாய்க்காவிடில் என்னைப் பற்றியோ பிள்ளையைப் பற்றியோ கவலை வேண்டாம். இவனுடைய பிறப்பின் மேன்மை என்ருவது ஒரு நாள் இவனை சக்கர வர்த்தியாக ஆக்கிவிடும். என்னைப் பற்றியோ கவலை யில்லை. நான் முன்போல் தபஸ்வினியாக வனத்தில் இருப்பேன். இதோ போகிறேன்! இனி எனக்கு இங்கு

---

என்னவேலை ?" என்று கோபம் தெறிக்கப் பேசிமுடித்து, சிறுவனுடன் வனம் நோக்கிப் புறப்பட்டாள்.

அது சமயம் அங்கு அசரீரி முழங்கிற்று. சகுந்தலை யின் வாக்கு ஸத்யமே! என்று உறுதிப்படுத்தியது. ஸபையினரும் ஏக மனதாக ஆமோதித்து அரசனை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டினர். அதற்கு முன்பாக அரசனே எழுந்துவிட்டான். சகுந்தலையை நோக்கி 'இவள் என் பாரியை, இவன் என் புத்ரன்' இதை நான் முன்பே அறிவேன். நீங்களும் இதை அறிந்து ஆமோதிக்கவே நினைத்து, இத்தனை நேரம் பொறுமையைக் கடைபிடித்தேன்.

பிறகு துஷ்யந்தன் சகுந்தலையை அழைத்து ஆதரவும் அன்பும் கனியப் பேசி, தன் பிழை பொறுக்கச் செய்து, எல்லோரும் அறிய அரியணையில் அவளை அமர்த்திக்கொண்டான். அந்தப் பிள்ளையை அணைத்து "இவனை என் வரவு காணும்வரை மூன்று வருஷம் நீ ப³ரித்தாய் (சுமந்தாய்). உன் வாய்மைக்காகவும், தேவர்களுடைய கட்டளைக்காகவும், எனக்காகவும் இவனை நான் ப³ரிக்கப் போகிறேன். இவனால் இனி இந்த உலகம் ப³ரிக்கப்படப்போகிறது. இவன் கீர்த்தியால் இவ்வுலகம் பாரதி என்று அழைக்கப்படும். இவனால் இந்தக் குலத்திற்கே 'பாரதம்' என்ற பெயரும் ஏற்படும்" என்று சொல்லிப் பெருமை அடைந்தான்.

---

## தார்மிகச் செய்திகள்.

**ஸ்ரீ சங்கர ஜயந்தி:** கல்கத்தா பூனா முதலிய பல இடங்களிலிருந்து ஸ்ரீ சங்கர ஜயந்தி நடந்த வைபவம் பற்றிக் கடிதங்கள் வந்தன. முழுமையும் இடமில்லாததால், பிரசுரிக்க முடியவில்லை. மன்னிக்கவும். ஸ்ரீ சங்கர ஜயந்தியில் ஸ்ரீ சங்கரர் ஸம்பந்தமான விஷயமே முக்யமென விநயத்துடன் தெரிவிக்கிறோம்.

---

**காரணமின்றிக் கடிந்தாலும் திட்டினாலும் பொறு.**

# நூல் அறிமுகம்.

**ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்:** வையாசிமாத இதழில் ஸ்ரீ ரகுநாத அய்யரின் (ஹிந்து ஆசிரியர்) இரு கவிகள் கண்ட காஞ்சி என்ற தும் ஜம்புகேஶ்வரம் கும்பாபிஷேகச் செய்தி ஸ்ரீ மதாசார்யாள் படம் இவை தலை சிறந்து விளங்குகின்றன. ஆதி சங்கரர் இயற்றிய ஸகல நூல்களின் பெயரும் அதன் ஸாரமும் தற்கால பீடாதிபதிகளின் யாத்ரை விஜய ஸ்தலம் உபன்யாஸம் இவை இடம் பெற்றால் ஆஸ்திகர் அகத்தில் அதிகமாக இடம் பெறும். மூலத்துடன் இதுவரை எவரும் வெளியிடாத சில ப்ரகரணம் வந்தால் சந்தாதாரர் ஒரு புத்தகமாக்கிப் பலன்பெறுவர்.

**ஆதித்ய ஹ்ருதயமும் கநகதாரா ஸ்தவமும்:** தமிழ் எழுத்தில் குருகுல வெளியீடு 21 ந. பை. ஸ்டாம்ப் அனுப்பி அர்த்தத்துடன் கூடிய இவைகளைப் பெறலாம். ஸகல துன்பங்களையும் அகற்றி ஜயத்தை அளிப்பது. ஆதித்ய ஹ்ருதயம். ஸ்ரீ ராமனுக்கே ஜயமளித்தது. ஆசார்யாள் ஏழைப் பெண்ணுக்கு தங்க நெல்லிக் கனி வர்ஷிக்கச் செய்தது. கவலை நீங்கி ஜபம் விரும்புவோர், செல்வத்தை அபேக்ஷிப்பவர் பாராயணம் செய்யவேண்டிய உயர்ந்த நூலிது.

**சனிவார வெங்கடேச பூஜை:** குருகுல வெளியீடு. 20 ந. பை. ஸ்டாம்பு அனுப்பி குருகுலத்தில் பெறலாம். ஸகல கஷ்டங்களையும் அகற்ற வல்லது. வெங்கடேச்வரரின் மூல மந்த்ரத்திலிருந்து ஒரு எழுத்துக்கு ஒரு நாமாவாக 108 நாம மமைந்தது. முடிவில் மூலமந்திரமுமுள்ளது. ப்ரதி சனியிலும் துளஸியால் அர்ச்சனை செய்தால் தீராத வினைகளும் தீரும்.

**சைவாகம நூல்கள்:** இதுவரை ஷை விஷயமாக அச்சான ஸகல நூல்களும் சென்னை மாகாண அர்ச்சகர் சங்க கார்யதரிசி, தம்பு செட்டி வீதி, சென்னை–1 என்ற விலாசத்தில் பெறலாம்.

**ஸ்ரீ குரு குஹவிலாஸ் ஸ்தோத்ரம்:** கர்தா சிங்காரசுப்ரமணியசாஸ்த்ரிகள் C/o ஓரியண்டல் ஸ்கூல், மேல சிந்தாமணி, திருச்சி 2, விலை 14 அணா. குஹன் பெருமையை 76 சுலோகங்களால் வர்ணித்து தமிழுரையும் எழுதியிருக்கிறார், சிறந்த நடை.

**அத்வைத ஸபை:** வழக்கம்போல், 20உ முதல் 5 தினங்கள் திருச்சியில் பரமாசார்யாள் ஸன்னதியில் பரீக்ஷை வாக்யார்த்த உபன்யாஸங்களுடன் நடந்தது. இது ஜீவகளையுடன் பலருக்கும் பலவிடங்களில் பயன்படுமாறு நடந்தால் ஶ்லாக்யமாம்.

**பொன்மலை சங்கர ஜயந்தி கமிட்டி:** ஷை உத்ஸவத்தை சிறப்பாக நடத்தி 16 பக்கமுள்ள ஒரு தமிழ் நூலில் ஆதி சங்கரர் இயற்றிய சில துதிகளை வெளியிட்டிருக்கின்றனர். நேரில் 1 அணா கொடுத்து தபாலானால் 14 காசு ஸ்டாம்பனுப்பி J. வெங்கட்ராமன், F 33/5, பொன்மலை, திருச்சி-4 என்ற விடத்தில் பெறலாம்.

---

**அதைக்கேளாததுபோல்செல். அவனுக்கும் நற்புத்திவரும்**

# ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்.

1. कमला कुच चूचुक कुंकुमतो नियतारुणितातुल नील तनो।
कमलायत लोचन लोकपते विजयीभव वेंकट शैलपते॥

கமலாகுச சூசுக குங்குமதோ-நியதாருணிதா துல நீலதநோ | கமலாயதலோசந லோகபதே-விஜயீபவ வேங் கடசைலபதே ॥

கமலா - மஹாலக்ஷ்மியின், குசசூசுக - ஸ்தநாக்ரத்தி லுள்ள, குங்குமத: - குங்குமத்தால், நியதாருணித - எப் பொழுதும் சிவந்த, அதுல - ஒப்பற்ற, நீலதநோ - கருத்த மேனி உள்ளவரே, கமல - தாமரை போல், ஆயத-நீண்ட, லோசந - கண்ணுள்ளவரே, லோகபதே - லோகநாத! வேங்கட சைலபதே - வேங்கடாசலபதியே, விஜயீபவ - வெற்றியோடு விளங்குக.

2, स चतुर्मुख षण्मुख पंचमुख प्रमुखाखिल दैवतमौलिमणे।
शरणागत वत्सल सारनिधे-परिपालय मां वृष शैलपते॥

ஸ சதுர்முக ஷண்முக பஞ்சமுக ப்ரமுகாகில தைவத மௌலிமணே | ஶரணாகத வத்ஸல ஸாரநிதே-பரிபாலய மாம் வ்ருஷ ஶைலபதே ॥

ஸ சதுர்முக - பிரும்மாவுடன், ஷண்முக - முருகன், பஞ்சமுக - சிவன், ப்ரமுக - முதலிய, அகிலதைவத - எல் லாதேவர்க்கும், மௌளிமணே - சிரோமணியானவரே, ஶரணாகதவத்ஸல-ஶரணமடைந்தவரிடம் அன்புடையவரே, ஸாரநிதே - ஸாரமானநிதியே, வ்ருஷசைலபதே - வேங்க டாசலபதியே! மாம் - என்னை, பரிபாலய - காப்பாற்றும்.

3. अतिवेलतया तव दुर्विषहैः अनुवेल कृतैः रपराधशतैः
भरितं त्वरितं वृषशैलपते-परया कृपया परिपाहि हरे॥

அதிவேலதயா தவதுர்விஷஹை: அநுவேலக்ருதை: அபராதஶதை: | பரிதம் த்வரிதம் வ்ருஷஶைலபதே-பரயா க்ருபயா பரிபாஹிஹரே ॥

அதிவேல - எப்போதும், க்ருதை: - செய்யப்பட்ட தும், தவ - உமக்கு, அதிவேலதயா - எல்லையில்லாமல் இருப்பதால், துர்விஷஹை: - ஸஹிக்கமுடியாததுமான, அபராதஶதை: - நூற்றுக்கணக்கான குற்றங்களால், பரி தம்–நிறைந்திருப்பவனும், த்வரிதம்-குற்றத்தை யகற்றிக்

---

கோபத்தை அடக்க 108 முறை ராமா எனக் கூறு.

கொள்ள வேகமாக வந்தவனுமான, மாம் - என்னை வ்ருஷசைலபதே - வேங்கடாசலபதயே! க்ருபயா - கருணையால், பரிபாஹி - ரக்ஷியும்.

4. अधिवेंकट शैलमुदारमतेः जनताभिमताधिक दानरतात् ।
परदेवतया गदितान्निगमैः कमला दयितात् न परं कलये ॥

அதிவேங்கட ஶைலமுதாரமதே: ஜநதாபிமதாதிக தாநரதாத் | பரதேவதயா கதிதாத் நிகமை:-கமலாதயிதாத் நபரம் கலயே ||

அதிவேங்கட சைலம்-திருப்பதிமலைமீது, உதாரமதே: விசாலமான மநதுடன் இருப்பவரும், ஜநதா-ஜநங்களுக்கு அபிமத-விரும்பியதைவிட அதிக-அதிகமாக தாந-கொடுப்பதில், ரதாத் -ஆசைஉள்ளவரும், நிகமை:- வேதங்களால், பரதேவதயா - பரமாத்மா என்று, கதிதாத் - கூறப்பட்டவருமான, கமலாதயிதாத் - லக்ஷ்மீபதியைத்தவிர, பரம்-மற்ற தேவதையை, ந கலயே - எண்ணவில்லை.

5. कलवेणु रवावश गोपवधू शत-कोटि वृतात् स्मरकोटि समात्।
प्रतिवल्लवि काभिमतात् सुखदात् वसुदेवसुतात् न परं कलये॥

கலவேணு ரவாவஶ கோபவதூ ஶத கோடி வ்ருதாத் ஸ்மரகோடி ஸமாத் | ப்ரதிவல்லவிகா பிமதாத் ஸுகதாத் வஸுதேவஸுதாத் ந பரம் கலயே ||

கல - அழகான. வேணுரவ - குழல் ஓசையால், அவசப்ரவஶர்களான, கோபவதூ - கோபஸ்த்ரீகளின், ஶத கோடி வ்ருதாத் - நூறு கோடிகளால் சூழப்பட்டவரும், ஸ்மர - மன்மதரின் கோடி - கோடிக்கு, ஸமாத் - ஸமமானவரும், ப்ரதிவல்லவி - ஒவ்வொரு கோபிகைக்கும், அபிமதாத் - இஷ்டமானவரும், ஸுகதாத் - ஸுகத்தை அளிப்பவருமான, வஸுதேவ ஸுதாத்-கிருஷ்ணனைத்தவிர, பரம்-சிறந்தவராக ஒருவரை, நகலயே - எண்ணவில்லை.

6. अभिराम गुणाकर दाशरथे जगदेक धनुर्धर धीरमते ।
रघुनायक राम रमेश विभो वरदो भव देव दया जलधे ॥

அபிராம குணாகர தாஶரதே - ஜகதேக தநுர்தர தீரமதே | ரகுநாயக ராம ரமேஶ விபோ வரதோபவ தேவ தயா ஜலதே ||

---

கூடுமானவரை பிரயாணத்தைக் குறைத்துக்கொள்.

அபிராம - அழகானவரே, குணகர — குணங்களுக்கு இருப்பிடமானவரே, தாஶரதே - தசரத புத்ர, ஜகதேக தநுர்தர — உலகில் ஒப்பற்ற வில்லாளியே, தீரமதே - தைர்யமுள்ள புத்தி உடையவரே, ரகுநாயக - ரகுவம்ஶ நாயக, ராம - ராம, ரமேஶ - லக்ஷ்மீ பதே, விபோ - ப்ரபோ, தேவ — தேவ, தயாஜலதே — கருணைக்கடலே வரத: - வரமளிப்பவராக, பவ - இரும்.

7. अवनी तनया कमनीयकरं रजनीचर चारुमुखांवुरुहम् ।
रजनी चर राजतमो मिहिरं-महनीय महं रघुराममये ॥

அவநீதநயா கமநீயகரம்-ரஜநீசர சாருமுகாம் புருஹம் | ரஜநீசர ராஜதமோ மிஹிரம்-மஹநீயமஹம் ரகு ராம மயே ॥

அவநீதநயா - பூதேவிபுத்ரியானஸீதையால், கமநீய-விரும்பப்பட்ட, கரம் - கையுள்ளவரும், ரஜநீசர - சந்த்ரன் போல், சாரு - அழகான, முகாம்புருஹம் - முககமல முள்ளவரும், ரஜநீசாரரஜ - ராக்ஷஸர்களின் அரசனை ராவணன் எனும், தமோமிஹிரம் - இருளை நீக்கும் ஸூர்யன் போன்ற வரும், மஹநீயம் - கொண்டாடத்தக்கவருமான, ராமம் - ராமனை, அஹம் - நான். அயே - சரண மடைகிறேன்.

8. सुमुखं सुहृदं सुलभं सुखदं स्वनुजं च सुकाय ममोघ शरं ।
अपहाय रघूद्वह मन्य महं - नकथंचन कंचन जातु भजे ॥

ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம்-ஸ்வநுஜஞ் ச ஸுகாய மமோக ஶரம் | அபஹாய ரகூத்வஹ மன்ய மஹம்-நகதஞ்சந கஞ்சந ஜாது பஜே ॥

ஸுமுகம் - அழகான முகமுள்ளவரும், ஸுஹ்ருதம் - நல்ல மநமுள்ளவரும், ஸுலபம் - ஸுலபமானவரும், ஸ்வநுஜம் ச - சிறந்த தம்பி உள்ளவரும், ஸுகாயம் - அழகானசரீர முள்ளவரும், அமோகஶரம் - வீணாகாதஶரமுள்ள வருமான, ரகூத்வஹம் - ராகவனைத் தவிர, கஞ்சந - மற்றவர் ஒருவரையும், கதஞ்சந - எப்போதும், நபஜே - பஜிக்க மாட்டேன்.

9. विना वेंकटेशं न नाथो न नाथः सदा वेंकटेशं सरामि सरामि ।
हरे वेंकटेश प्रसीद प्रसीद-प्रियं वेंकटेश प्रयच्छ प्रयच्छ ॥

---

